# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

“ நாம் இன்னும் ராணுவத்தின் தகுதியை புரிந்து கொண்டிருக்கவில்லை. தேவையே இல்லாமல் ராணுவத்தையும் ஆயுதத்தையும் குவித்துக் கொண்டிருக்கிறோம். நாட்டு வருமானத்தில் **75%** இராணுவத்துக்கே செலவிட்டு கொண்டிருக்கிறோம். இனி நமக்கு அடுத்தவர்களை அடிமைப்படுத்தும் இராணுவம் தேவையில்லை. ஆக்கப்பூர்வமான இராணுவம் மட்டுமே போதுமானது. உலக நாடுகள் அனைத்தும் தங்கள் இராணுவத்தை சிவில் இராணுவமாக மாற்றி தங்கள் நாட்டில் ஆக்கப் பணிகளில் இறக்கிவிட்டால் உலகம் முழுவதும் சொர்க்கமாக மாறிவிடும்.

இதற்கான சாத்தியத்தை வெறும் கருத்தளவில் புரிந்து கொள்வது மட்டுமே போதுமானதாகும். முதலில் சாத்தியத்தை புரிந்து கொள்வோம். பிறகு அது நமக்குத் தேவையான ஒன்றாக மாறிவிடும்.

## ஞான உறுதி முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

**ஞானப்புரிதலை புரிந்து கொள்வது எவ்வளவு முக்கியமோ அதை விட பல மடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்து கொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது.**

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் நமக்குள் வெறும் கருத்தாக மட்டும் பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enlightenment Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.

நாள் : **30.12.2018 மாலை 5.00 மணிமுதல் 1.1.2019 மதியம் 3.00 மணிவரை**

செலவுப் பகிர்வு **ரூ. 3000/-** நபர் ஒருவருக்கு

**இந்த சிறப்பு ஞான உறுதி முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
2. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். ஆனால் புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

### முன்பதிவு செய்யும் வழிகள்

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் **A/c Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-3.
கைப்பேசி : 9994205880, 97891 65555




# இராணுவ ஆட்சி



- ஸ்ரீ பகவத்

அந்தக் கிராமத்துக்கு நீங்கள் தனிமையாகப் போகிறீர்கள். பஸ்ஸிலிருந்து கிராமத்துக்கு வந்து இறங்கியதும், வந்து சேர்ந்த விபரத்தை உங்கள் வீட்டினருக்கு செல்போனில் தெரிவிக்கிறீர்கள்.

செல்போனில் நீங்கள் முழுவதும் பேசி முடிப்பதற்குள் திடகாத்திரமான இளைஞன் ஒருவன் உங்கள் போனைப் பிடிங்கிக் கொண்டு ஓடி விடுகிறான்.

நீங்களும் வேகமாக ஓடி அவனைப் பிடித்து விடுகிறீர்கள்.

உங்கள் இருவரையும் சுற்றிக் கூட்டம் கூடி விடுகிறது.

நீங்கள் செல்போனை அவன் உங்களிடமிருந்து பறித்துக் கொண்டதைக் கூறுகிறீர்கள். அவர்கள் அவனை விசாரிக்கிறார்கள்.

அவனும் ஒப்புக் கொள்கிறான். ஆனால் திரும்ப ஒப்படைக்க மறுக்கிறான்.

"நான் பறித்துக் கொண்டது எனக்குதான் சொந்தம். அவனுக்கு பலமிருந்தால் என்னிடம் சண்டையிட்டு என்னிடமிருந்து அந்த செல்போனைப் பறித்துக் கொள்ளச் சொல்லுங்கள். நான் வீரமும் பலமும் உள்ளவன். எனது பலத்தையும் வீரத்தையும் காட்டி அந்த செல்போனைப் பறித்துக் கொண்டேன். அந்தக் கோழைப்பயலை என்னிடம் சண்டையிட்டு அதை என்னிடமிருந்து எடுத்துக் கொள்ளச் சொல்லுங்கள். மனிதன் என்று இருந்தால் அவனுக்கு ஆண்மை வேண்டாமா?"

- அவன் நியாயம் பேசினான்.

அந்தக் கூட்டத்தினரும், "ஆம்; அவன் சொல்வதும் நியாயந்தானே? நீ அவனோடு சண்டையிட்டு அவனிடமிருந்து உன்னுடைய பொருளை மீட்டுக் கொள்வதுதானே நியாயம். இது உங்கள் இருவருடைய சொந்தப் பிரச்சினை. நீங்கள் இருவருமே தீர்வு செய்து கொள்ளுங்கள்," என்று கூறி விடுகிறார்கள்.

அவர்களது நியாயம் சரியானது தானா?

உங்களைத் தவிர அனைவருமே அதனை நியாயம் என ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

பிறகு நீங்களும் ஏற்றுக் கொள்வதில் என்ன தவறு?

நியாயம் என்பது எல்லோருக்கும் ஒன்றாகத்தானே இருந்தாக வேண்டும்?

உங்களுக்கொரு நியாயம், மற்றவர்களுக்கு ஒரு நியாயமாக இருக்க முடியுமா?

இது இந்தக் காலத்து நியாயமா அல்லது காலங்காலமாக இப்படித்தான் இருந்து வருகிறதா?

மூவேந்தர்களைப் பற்றித் தெரிந்து வைத்திருக்கிறீர்களா?

சேர, சோழ, பாண்டிய மன்னர்களைப் பற்றித் தெரிந்து வைத்திருக்கிறீர்களா?

அவர்களைப் பற்றி, அவர்களுடைய சிறப்பைப் பற்றி ஏதாவது கூறுங்களேன்.

இமயம் வரை போர் புரிந்து அனைத்து நாடுகளையும் கைப்பற்றிய, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைத் தெரியுமா?

கங்கை வரை கைப்பற்றிய கங்கை கொண்ட சோழனைத் தெரியுமா?

இவர்களெல்லாம் என்ன உரிமையில் அடுத்தவர்களுடைய நாடுகளைக் கைப்பற்றினார்கள்?

ஆங்கிலேயர்கள் எதற்காக இந்தியாவைக் கைப்பற்றினார்கள்?

என்ன உரிமையில் அவர்கள் உலகத்தின் பல இடங்களையும் கைப்பற்றினார்கள்?

நமது நாட்டைக் கைப்பற்றி நம்மையெல்லாம் அவர்கள் அடிமைப்படுத்தியது சரியானதா? அல்லது தவறானதா?

சரி என்று கூறுவீர்களா? அல்லது தவறு என்று கூறுவீர்களா?

எனது பேரக்குழந்தைக்கு இரண்டரை வயது ஆகியுள்ளது. மிருகங்கள் மற்றும் பறவைகளின் பெயர்களையும், எழுத்துக்களையும், எண்களையும் கற்றுக் கொடுக்கிறார்கள். குழந்தையும் சொல்லிக் கொடுப்பதைத் திரும்பக் கூறுகிறது.

ஆனால் சொல்லிக் கொடுப்பது அனைத்து ஆங்கில மொழியில்.

படித்தவர்களில் 99% இப்படி தங்கள் குழந்தைகளுக்கு ஆங்கிலக் கல்வியைத்தான் போதிக்கிறார்கள்.

இது சரிதானா?

இது எவருடைய ஏற்பாடு?

ஆங்கிலேயர்களின் ஏற்பாடா?

அல்லது ஆங்கில மொழிதான் உயர்வானதா?

இந்திய மொழிகள் அனைத்தையும் வெகு சீக்கிரத்தில் கற்றுக்கொள்ள முடியும். ஆனால் ஆங்கில மொழியை அவ்வளவு சுலபமாகக் கற்றுக் கொள்ள முடிவதில்லை.

நமது இனிமையான சொந்த மொழியை விட்டுவிட்டு கரடுமுரடான அந்த அந்நிய மொழியை நாம் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன?

இதுதான் நமது அடிமை விசுவாசமா?

அவர்கள் அனைவரும் நம்மை விட்டுவிட்டு ஓடிய பிறகும் நாம் இந்த விசுவாசத்தைக் காட்ட வேண்டுமா?

இன்னும் எத்தனை வருடங்களுக்கு இந்த விசுவாசத்தைக் காட்டப் போகிறோம்?

நாம் எவரும் முட்டாள்கள் அல்ல.

நாம் ஆங்கிலம் படிக்கிறோம் என்றால் அதற்குப் பல காரணங்கள் உள்ளன.

ஆங்கிலத்தைத் தவிர எந்த மொழியை நாம் படித்தோமானாலும் ஏதாவது ஒரு நாட்டுக்கு மட்டுந்தான் நம்மால் போக முடியும்.

ஆனால் ஆங்கிலம் நம்மை அனைத்து நாடுகளுக்கும் அழைத்துச் செல்கிறது. எந்தக் கல்வியையும் நம்மால் ஆங்கிலத்தில் கற்க முடியும்.

இந்தத் தகுதி ஆங்கிலத்துக்கு எப்படி வந்தது?

ஆங்கிலேயர்கள் திட்டமிட்டு இதனை நிறைவேற்றினார்களா?

அடுத்தவர்களை அடிமைப்படுத்தும் ஆங்கிலேயர்களின் அரக்கத்தனந்தான் இந்த விளைவுக்குக் காரணம்.

இது ஒன்றுதானா விளைவு?

சிதறிக் கிடந்த தேசங்களெல்லாம் சேர்ந்து இந்தியா என்ற பெயரில் இணைந்தது.

இந்தியா என்பது நாம் உருவாக்கியதல்ல; ஆங்கிலேயர் உருவாக்கியது.

ஆங்கிலேயர் உருவாக்கிய நாடுகள் பெரும்பாலானதாக இருந்ததால் அவர்களுடைய ஆங்கிலமும் பெரும்பான்மை பலம் பெற்று விட்டது.

எவருமே எதிர்பாராத ஓர் இணைப்பு இது.

இப்போது நமது கேள்வி என்ன?

பத்திரிகைச் செய்திகளைப் பார்வையிட்டு வருகிறீர்களா?

ஒவ்வொரு நாடும் நவீன போர் விமானங்களை வாங்கிக் குவித்து வருகின்றன.

"எந்த ஆபத்தையும் எங்களால் எதிர் கொள்ள முடியும்" என்று ஒவ்வொரு நாடும் சவால் விட்டு வருகிறது.

அவர்களுடைய சவால் சரியானதுதான் என்று கருதுகிறீர்களா?

நமது நாட்டை அடுத்தவர்கள் அபகரிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கருதுகிறீர்களா?

உங்களுடைய செல்போனை பாதுகாத்துக் கொள்ள நீங்கள் என்ன செய்ய வேண்டும்?

உங்களுக்குப் பாதுகாப்பாக இராணுவத்தையும் ஆயுதங்களையும் வைத்துக் கொள்ள வேண்டுமா?

ஆங்கிலேயர்கள் நம்மைக் கைப்பற்றி நம்மை அடிமைப்படுத்தியது போல், வேறு ஏதாவது நாடுகள் நம்மை அடிமைப்படுத்தும் நோக்கத்தில் உள்ளனவா?

அல்லது நாம் மற்ற நாடுகளைக் கைப்பற்றி அடிமைப்படுத்தும் நோக்கத்தில் உள்ளோமா?

நம்மை அடிமைப்படுத்தும் நோக்கம் எவருக்கும் கிடையாது.

அதுபோல் மற்றவர்கள் நாட்டை அபகரிக்கும் நோக்கமும் நமக்குக் கிடையாது.

பிறகு நாம் எவரிடம் சண்டையிட்டு ஜெயிக்க வேண்டும்?

பயங்கரமான போர்க்கருவிகளும், வெடிகுண்டுகளும் எதற்கு?

இராணுவத்தின் அவசியம் என்ன?

நல்ல வெயிலில் நடந்து விட்டு நீங்கள் உங்கள் வீட்டுக்குள் நுழைந்து பார்த்திருக்கிறீர்களா?

அதிக வெளிச்சத்திலிருந்து விடுபட்டுத் திடீரென வீட்டுக்குள் நுழைந்தோமானால் வீட்டினுள்ளே வைக்கப்பட்டுள்ள பொருட்களைக் கொஞ்சநேரம் பார்க்க முடியாது.

ஆனால் சிறிது நேரத்தில் நமது பார்க்கும் திறன் சகஜ நிலைக்கு வந்துவிடும்.

அந்தக் காலத்தில் நாம் வீரத்தோடு வாழ்ந்தது உண்மைதான். வீரத்தைப் போற்றியது உண்மைதான்.

ஆனால் இன்றைய நிலையில் அது அறிவீனம்.

அதிக வெளிச்சத்திலிருந்து நாம் வீட்டுக்குள் நுழைந்து விட்டதால் நமது கண்கள் இன்னும் சகஜ நிலைக்கு வந்திருக்கவில்லை.

ஆங்கில மொழியின் தகுதியை நாம் புரிந்து கொண்டதுபோல்

நாம் இன்னும் இராணுவத்தின் தகுதியைப் புரிந்து கொண்டிருக்கவில்லை.

மழலைப் பள்ளியை கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர அணுகுண்டுகள் தேவையா?

ஆனால் நாம் அவ்வாறுதான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

தேவையே இல்லாமல் இராணுவத்தையும் ஆயுதங்களையும் குவித்துக் கொண்டிருக்கிறோம்.

நாட்டு வருமானத்தில் 75%ஐ இராணுவத்துக்கே செலவிட்டுக் கொண்டிருக்கிறோம்.

எந்த லாபமும் இதனால் கிடைக்கவில்லை. ஒட்டு மொத்த 75% வருவாயும் ஒவ்வொரு வருடமும் வீணடிக்கப்பட்டுதான் வருகிறது.

அப்படியானால்?

இராணுவத்தைக் கலைத்து விட வேண்டுமா?

அப்படி நாம் கூறப் போவதில்லை.

காலங்காலமாக நாம் இராணுவத்தை வைத்துப் பராமரித்துப் பழகி விட்டோம்.

ஆகவே இந்த இராணுவத்தைத் தொடர்ந்து

வைத்துக் கொள்வதற்கு எந்த ஆட்சேபணையும் கிடையாது.

இதை இன்னும் கொஞ்சம் செம்மைப்படுத்தினால் கூடத் தவறில்லை.

சிலநாடுகளில் ஆண்கள், பெண்கள் இருவருமே இராணுவத்தில் பணியாற்றியிருக்க வேண்டும்.

அந்த நடைமுறையை அனைத்து நாடுகளுமே பின்பற்ற வேண்டியது அவசியம்.

அப்படி அதனை நமது நாட்டிலும் மாற்றி அமைக்க வேண்டும். அதுதான் நமது நாட்டுக்கும் நல்லது.

இராணுவத்தை வேண்டாம் என்று கூறி விட்டு நாமே ராணுவத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பது எந்த வகையில் நியாயம்?

நாம் ஏற்கனவே "ஸ்ரீ பகவத் பாதை" என ஒரு நூல் வெளியிட்டுள்ளோம். அதில் இது பற்றிய விபரங்களை விரிவான முறையில் எழுதியிருக்கிறோம்.

உலகம் முழுவதும் இதனைத் தெரிந்து கொள்வது பயன் தரும் என்ற நோக்கில் பலரிடமும் நன்கொடை பெற்று 200/- விலையுள்ள இந்நூலை ரூ. 50/-க்கு வெளியிட்டிருந்தோம்.

அது முடிந்து விட்ட நிலையில் அதனை இரண்டாவது பதிப்பாக "பயங்கரவாதம் தேவையா?" என்ற பெயரில் வெளியிட இருக்கிறோம்.

அதன் PDF file Online-ல் இலவசமாகக் கிடைக்கவும் ஏற்பாடு செய்துள்ளோம்.

ஒரு நூலைப் படிப்பது உலக நன்மையாக இருக்கும் என்றால், அது இந்த நூல்தான். - இன்றைய நிலையில்.

ஆங்கிலத்திலும் இந்நூல் மொழி பெயர்ப்பாகிக் கொண்டிருக்கிறது.

சில தினங்களுக்கு முன்னால் "கஜா" என்று பெயர் வைக்கப்பட்ட புயல் ஒன்று தமிழகத்தின் சில பகுதிகளை சின்னாபின்னப் படுத்தி விட்டது.

அதை முன் கூட்டியே கணித்து விட்டதால் உயிர்ப்பலி ஓரளவு குறைக்கப்பட்டு விட்டது.

ஆனால் இதை எழுதிக் கொண்டிருக்கும் நாள் வரை சீரமைப்புப் பணிகள் முடிக்கப்படாமல் உள்ளது. பாதிக்கப்பட்டவர்கள் அனைவரும் வாழ்வா சாவா என்று அல்லல் பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இராணுவம் என்ன செய்து கொண்டிருக்கிறது?

எல்லையில் போர் செய்து கொண்டிருக்கிறதா?

இராணுவத்தை அனுப்பினால் அனைத்துச் சீரமைப்புகளும் ஒரே நாளில் முடிந்து விடாதா?

உலக நாடுகள் அனைத்தும் தங்கள் இராணுவத்தை சிவில் ராணுவமாக மாற்றி

தங்கள் நாட்டில் ஆக்கப்பணிகளில் இறக்கி விட்டால் என்ன ஆகும்?

உலகம் முழுவதும் சொர்க்கமாகவே மாறி விடும்.

நாம் நமது வாழ்க்கையை வளமாக்க இரவு பகலாக உழைக்கிறோம்.

இது தேவையா?

ஒவ்வொருவரும் தங்களுடைய வளமையை நிறைவு செய்து கொள்ள மூன்று மணி நேரம் அளவில்

அதுவும் நமது 50 வயது வரை உழைத்தால் போதும்.

நமது அனைத்துப் பணிகளையும் இராணுவமே கவனித்துக் கொள்ளும்.

இதற்குத் தகுந்த சூழ்நிலை இதுவரை இந்த உலகில் ஏற்பட்டிருந்ததில்லை.

ஒவ்வொருவரும் குட்டி குட்டி தேசத்தவராக இருந்து கொண்டு ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்திக் கொண்டிருந்தோம்.

இப்போதுதான் ஒருவரை ஒருவர் அங்கீகரிக்கக் கற்றுக் கொண்டுள்ளோம்.

இனி நமக்கு அடுத்தவர்களை அடிமைப்படுத்தும் இராணுவம் தேவையில்லை.

ஆக்கப்பூர்வமான இராணுவம் மட்டும் போதுமானதாகும்.

இராணுவத்தால் முடியாதது எதுவும் இல்லை.

நமக்கு வேண்டிய அனைத்தையும் இராணுவமே நமக்கு வழங்கி விடும்.

இது நமக்குத் தேவைப்பட்டால் வெகு விரைவில் இது நம்மை வந்து அடைந்து விடும்.

தேவைப்படாதவரை இது நம்மை விட்டு விலகியே இருந்து விடும்.

தேவைப்படுவது என்பது என்ன?

இதற்கான சாத்தியத்தை வெறும் கருத்தளவில் புரிந்து கொள்வது மட்டுமே போதுமானதாகும்.

நீங்கள் மாதம் ரூ. 50,000/- சம்பாதிப்பதாக வைத்துக் கொள்வோம். உங்களுடைய சேமிப்புப் பணம் உங்களிடம் முப்பது லட்ச ரூபாய் உள்ளதாகவும் வைத்துக் கொள்வோம்.

நீங்கள் உங்களுக்கென வீடு ஒன்றை வாங்க எண்ணுகிறீர்கள்.

என்ன விலையில் வாங்க எண்ணுவீர்கள்?

கையில் இருக்கும் முப்பது லட்சத்திலா?

உங்களுக்கு வசதியான வீடு ஒன்று ஐம்பது லட்சத்தில் விலைக்கு வருகிறது.

உங்களுடைய சேமிப்பு ஐம்பது லட்சமாக உயரும் வரை காத்திருப்பீர்களா?

சம்பளப் பணத்தில் மாதந்தோறும் பாதியைச் செலுத்துவதன் மூலம் அந்த வீட்டை வாங்கி விட முடியும் என்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்களானால்

அந்த வீடு உங்களுக்குத் தேவைப்பட்டு விடும்.

உலக ஒற்றுமையின் சாத்தியக் கூறுகளை வெறும் கருத்தளவில் புரிந்து கொண்டால் போதும்.

அது நமக்குத் தேவையான ஒன்றாக மாறி விடும்.

சாத்தியத்தைப் புரிந்து கொள்வோம் முதலில்.

அதன் தொடர்ச்சியாக என்ன நடக்கிறது என்பதை அடுத்துப் பார்ப்போம்.



# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

நம் வாழ்வின் நோக்கம் என்ன?

ஆன்மிகத்தை பொறுத்தவரை முக்தி - விடுதலை, உலகியலை பொருத்தவரை எல்லா பிரச்சினைகளிலிருந்தும் விடுபட்டு நிறைவாகவும் முழுமையாகவும் வாழ்வது. உண்மையில் இரண்டும் ஒன்றே. மனித குலத்தின் நோக்கமே ஞானத்தின் மூலம் விடுதலையை பெற்று நிறைவாக வாழ்வதே. இதற்காகதான் பலர் இல்லறத்தை துறந்து துறவறத்தை மேற்கொண்டு இந்த தேடுதலுக்காகவே வாழ்க்கையை அர்பணித்து விடுகிறார்கள். பலர் ஆன்மிகத்தில் ஞானத்தைப் பற்றியும் விடுதலையைப் பற்றியும் பல கற்பனைகளை வைத்துக்கொண்டு மாயையில் சிக்கி வாழ்நாள் முழுவதும் முயன்று தேடி வருகிறார்கள். ஆனாலும் இதுவரை இது எட்டாக்கனியாகவே இருந்து வருகிறது. காரணம் ஞானத்தைப் பற்றிய சரியான அணுகுமுறை இல்லாததே ஆகும். ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் சரியான - புதிய அணுகுமுறையில் ஞானம் என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாக மலர்ந்துள்ளது.

உண்மையில் விடுதலை என்பது அடைய வேண்டிய ஒன்றே அல்ல. விட வேண்டியதை விடுவதால் நிகழ்வாகும். இல்லாத ஒன்றை கற்பனை செய்து அதை அடைய முயற்சி செய்வது என்பது கீழ் வானத்தை அடைவதற்காக பயணிக்கும் முயற்சியே ஆகும். விடுதலையை பொறுத்தவரை அடைதல் என்பதே இல்லை. விடுதலை என்பது அகத்தை அதன் போக்கில் விடுதலே ஆகும். இங்கே முயற்சிதான் தடை. தன் அக முயற்சியை கைவிடுவதற்கான புரிதலே ஞானம்.

அய்யாவின் ஞான உரையை திறந்த மனதுடன் ஒரு மணி நேரம் கேட்டு உள் வாங்கினாலே போதும். ஞானப் புரிதல் எளிதில் கிடைத்துவிடும். பல ஆண்டு தேடுதல் முடிவுக்கு வந்துவிடும். அய்யாவின் நூல்களும் உரைகளும் பலருக்கு ஞானத்தை வழங்கியுள்ளது. இது உலக மக்கள் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்பதே நமது நோக்கம்.

அதற்கு வழிவகுக்கும் விதமாக திரு **அருள் ஜெரால்டு ஜெவிஸ், துபாய்** அவர்கள் இருபத்தி நான்கு மணி நேரமும் அய்யாவின் ஞான உரை ஒலித்துக் கொண்டிருக்கக்கூடிய "ஞான ஒலி" என்ற ஆன்லைன் ரேடியோ ஸ்டேஷனை உருவாக்கி ஒலிபரப்பி கொண்டிருக்கிறார்.

ஐயாவின் ஞான உரைகளை உலகில் எங்கிருந்து வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் கீழே கொடுக்கப்பட்டுள்ள Link யை பயன்படுத்தி மொபைல் போன் மூலம் கேட்டு பயன் பெறலாம்.

**http ://station.voscast.com/5bdd87e6e019b/**

திரு. **அருள் ஜெரால்டு ஜெவிஸ், துபாய்** அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் ஐயாவின் நூல்களில் சமுதாய வளர்ச்சிக்கான சாத்தியக்கூறுகளை கூறும் **ஸ்ரீ பகவத் பாதை** எனும் நூல் தற்போது மேலும் சில அத்தியாயங்கள் இணைக்கப்பட்டு **"பயங்கரவாதம் தேவையா?"** என்ற தலைப்பில் புதிய பொலிவுடன் அச்சிடப்பட்டு வெளிவர உள்ளது. இத்துடன் **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு, ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** நூல்களும் மேலும் சில அத்தியாயங்கள் இணைக்கப்பட்டு புதிய பொலிவுடன் வெளிவர உள்ளது. நிதி பற்றாக்குறையால் இப்பணி தாமதமாகி வருகிறது. அதற்கு தேவையான நிதிக்காக நமது குடும்ப உறுப்பினர்களிடம் வேண்டுகோளும் விடுத்துள்ளோம். வாய்ப்புள்ளவர்கள் உதவி செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். ஐயா வழங்கும் எளிமையான ஞான புரிதலை தேடுதல் உள்ள அனைவருக்கும் கொண்டு செல்ல நாம் அனைவரும் ஒன்றிணைந்து செயல்படுவோமாக.

## வேண்டுகோள்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் ஐயா வின் மிக முக்கியமான நூல்களான **1. கவலைகள் அனைத்திற்கும் தீர்வு. 2. பயங்கரவாதம் தேவையா? 3. ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** ஆகிய நூல்கள் தீர்ந்துவிட்டன. மீண்டும் புதிய பொலிவுடன் மேலும் சில அத்தியாயங்களை இணைத்து வெளியிட உள்ளோம். ஆனால் அச்சிடுவதற்கு தேவையான பணம் இல்லாததால் தாமதமாகிக்கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் நன்கொடை வழங்கி உதவினால் ஐயாவின் கருத்தை அனைவருக்கும் எடுத்துச் செல்ல பேருதவியாக இருக்கும்.

வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களால் இயன்ற தொகையை கீழ்க்கண்ட கணக்கு எண்ணில் செலுத்தி உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1507620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem.**

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன்**

# ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பர் மாதத்தில் 4 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நான்கு நாள் ஞான முகாம் வருகின்ற டிசம்பர் மாதத்தில் சேலத்தில் நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106.

செலவு பகிர்வு
ரூ. **5000/-** நபர் ஒருவருக்கு

## டிசம்பர்

நாள் : **22.12.2018** சனி முதல்
**25.12.2018** செவ்வாய் வரை

நேரம் : சனி காலை 9.00 மணி முதல்
செவ்வாய் மதியம் 3.00 மணி வரை

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம். அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

### முன்பதிவு செய்யும் வழிகள்

M.O, D.D. (or) Cheque : வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

Direct Payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

# Special Satsang / Retreat in English

By **Sri Bagavath**

**At His Residence / Ashram Jarugu Hills, Salem (Around 140 Kms. from Thiruvannamalai)**



## Topics

- Enlightenment
- Liberation
- Who am I?
- Yogic Powers and Experiences
- Manolaya and Manonasa
- Psychological Action and Physical Action
- Karma and Action of God
- Confirmation on Enlightenment

2019 January 24th to 27th

Daily
*Morning :* 10.00 a.m. to 01.00 p.m.
*Evening :* 06.00 p.m. to 08.00 p.m.

You may arrive on 23rd itself
No Fee for Satsang
You may Donate for Stay and Food

For Address Click:
Baghavat Bhavan in Google Map

For Information:
E-mail: sribagavathji@gmail.com

Mobile: 9789165555, 9994205880, 7010691267, 9944215677



திரு. **ஆனந்த்,** சென்னை.
செல் : 98843 48800

# கேள்வி ? பதில்...

## "ஞானத்தின் ஆராய்ச்சி"



பக்தியின் முழுமையே சரணாகதி. சரணாகதியே விடுதலையைத் தரும். விஞ்ஞான அறிவு வளர்ச்சி அடைந்த இந்த காலத்தில் நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படும் சரணாகதிக்கு சாத்தியமில்லை. நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படும் சரணாகதியும் அறிவின் இயலாமையை புரிந்து கொள்வதால் ஏற்படும் சரணாகதியும் ஒன்றே. தற்காலத்திற்கு ஏற்றாற்போல் அறிவின் இயலாமையை அறிவைக் கொண்டே புரிந்துகொள்ளும் புதிய அணுகுமுறையே இந்த ஆராய்ச்சி.

இதற்கு முன் எத்தனையோ ஆன்மிக புத்தகங்களை படித்திருப்பீர்கள். ஆனால் இது சற்று வித்தியாசமானது. வழக்கமான கதை சொல்லும் பாணியில் இல்லாமல் இந்த கட்டுரை ஒரு சோதனை கூடத்தில் சோதனை செய்வது போல் அமைத்து இருக்கிறோம்.

இந்த கட்டுரை உங்களை நீங்கள் இதுவரை பார்க்காத புதிய கோணத்திற்கு அழைத்து செல்லும். இது மெதுவாக உங்களை நீங்களே பார்க்க செய்யும். உங்களுக்குள்ளே ஆழமாக இறங்கி கேள்விகள் கேட்க வைக்கும்.

நீங்களே அந்த உன்னதமான உண்மையை உணர வைக்கும். ஆகவே நீங்கள் தயவு செய்து திறந்த மனதுடன் பயணிக்க தயாராகுங்கள்.

ஓர் அறிவியல் சோதனை கூடத்தில் எந்த ஒரு முன் முடிவுமின்றி ஓர் அறிவியல் சோதனை செய்வது போல ஒரு திறந்த மனதுடன் இந்த சோதனையை செய்து பார்க்கவும்.

உங்கள் பயணம் வெற்றிகரமாக அமைய வாழ்த்துக்கள்!!!

இனி ஆராய்ச்சிக்குள் செல்வோம்.

### சோதனை – திறந்த மனதுடன் அணுகுவது



ஒரு சிறு சோதனை மூலம் நமது பயணத்தை தொடங்குவோம்.

1. இரண்டு கண்ணாடி கோப்பைகளை எடுத்து கொள்ளுங்கள். ஒன்றில் தண்ணீர் நிரப்பியும் இன்னொன்றை காலியாகவும் வைத்துக் கொள்ளுங்கள்.

2. ஒரு தண்ணீர் பாட்டலிலிருந்து ஏற்கெனவே நிரம்பி இருக்கிற கோப்பையில் தண்ணீர் ஊற்றுங்கள்.

3. இப்பொழுது என்ன நடக்கும்? தண்ணீர் தரையில் சிந்தி விடும். நீங்கள் எவ்வளவு முயற்சி செய்தாலும் சரி, தண்ணீர் ஊற்ற ஊற்ற தண்ணீர் தரையில் சிந்தி கொண்டே இருக்குமே தவிர கோப்பையின் உள்ளே செல்லாது.

**விளக்கம் :** கோப்பையில் உள்ள தண்ணீர் நாம் ஏற்கனவே நம் மனதினுள் சேர்த்து வைத்துள்ள ஆன்மிகம், மனம், ஞானம், விடுதலை சார்ந்த கருத்துக்களை குறிக்கிறது. அந்த கோப்பை இவை அனைத்தையும் ஏற்றுக்கொள்ளும் நம் மனதை குறிக்கிறது.

4. நாம் இப்பொழுது கோப்பையை காலி செய்து கொள்வோம். காலி செய்வது என்பது தண்ணீரை தூக்கி தூர எறிந்து விடுவது அல்ல. தற்காலிகமாக வேறு ஒரு கோப்பையிலோ அல்லது வேறு ஒரு பாத்திரத்திலோ மாற்றி கொள்வது.

**விளக்கம் :** உங்களுடைய கருத்துக்களை எல்லாம் தூர தூக்கி எறிந்து விட சொல்லவில்லை. நீங்கள் அதை சற்று நேரம் ஒதுக்கி வைத்து விட்டு இந்த புதிய சோதனையை திறந்த மனதுடன் மேற்கொண்டாலே போதும். அதுதான் நமது குறிக்கோள்.

5. இப்பொழுது தண்ணீர் இல்லாத அந்த காலி கோப்பையில் தண்ணீர் ஊற்றினால் அந்த கோப்பையில் தண்ணீர் தங்கும். தண்ணீர் கீழே சிந்தாது.

**விளக்கம் :** ஏற்கனவே நமது மனதில் இருந்த கருத்துக்களை தற்காலிகமாக தள்ளி வைப்பதால், நம் மனது புதிதாக கருத்துக்ளை ஏற்று கொள்ளும் தகுதிக்கு வந்து விடும்.

### சோதனை – மனதிற்குள் விசாரணை செய்வது



இந்த சோதனையின் பொருட்டு நீங்கள் ஒரு சாதாரண மனிதர் என்று எடுத்து கொள்வோம். உங்களுக்கு எந்த ஆன்மிக

கருத்துக்களை பற்றியும் ஆன்மிக போதனைகள் பற்றியும் எதுவும் தெரியாது என்று வைத்து கொள்வோம். இது நாம் திறந்த மனதுடன் அணுக உதவியாக இருக்கும். இப்பொழுது நாம் ஒரு தீவிர விசாரணைக்குள் செல்வோம்.

கேள்விகள் அனைத்தும் சிவப்பு நிறத்திலும் மாதிரி பதில்கள் அனைத்தும் கருப்பு நிறத்திலும் கொடுக்க பட்டிருக்கிறது. இந்த கேள்விகளுக்கு நீங்கள் உங்களுடைய சொந்த பதில்களை பொறுத்தி பாருங்கள்.

1. உங்களுடைய பிரச்சினை என்ன? இந்த கட்டுரையிலிருந்து என்ன எதிர்பாக்கிறீர்கள்?

குடும்ப உறவுகளை சரியாக சமாளிக்க முடியாமல் போதல், எப்பொழுதும் மன அமைதியில்லாமல் இருத்தல், வெறுப்பு உணர்வு, அடிக்கடி கோபம், பய உணர்வு, நிம்மதியின்மை ஆகிய பிரச்சினைகள் இருக்கின்றன. இதற்கெல்லாம் ஒரு தீர்வை எதிர்பார்க்கிறேன்.

2. இதில் எதை நீங்கள் உங்களுடைய மிகப்பெரிய பிரச்சினையாக கருதுகிறீர்கள்? (உங்களுடைய நிஜ வாழ்க்கையில் இருக்கும் ஒரு உண்மையான பிரச்சினையை எடுத்து கொள்ளுங்கள்)

## குடும்ப உறவுகளில் பிரச்சனை

3. இப்பொழுது பிரச்சினையை இரண்டு பகுதிகளாக பிரித்து கொள்ளுவோம் - அகம் (மனம் சார்ந்தது) மற்றும் புறம் (வெளி உலகம் சார்ந்தது) முதலில் நாம் அக பிரச்சினைக்கு தீர்வு கண்டுவிட்டு பின்பு புற பிரச்சினையை எடுத்து கொள்வோம்.

உங்கள் மன பிரச்சினையின் ஆணி வேர் என்ன? உங்கள் மனப் பிரச்சினையின் ஆணி வேரை எவ்வாறு தெரிந்து கொள்வது?

எனக்கு மனப்பிரச்சினையின் ஆணி வேர் பற்றி சரியாக எதுவும் தெரியவில்லை. தயவு செய்து எனக்கு இதை எப்படி கண்டு கொள்வது என்பது பற்றி சொல்லி கொடுங்கள்.

4. சரி, இப்பொழுது மனப்பிரச்சினையை ஒரு தர்க்கரீதியாக அணுகுவோம். உங்கள் குடும்ப உறவுகளில் என்ன பிரச்சினை, அது எப்படி உங்களை பாதிக்கிறது?

உறவுகளை சரியாக நிர்வாகிக்க முடியாததால் அது என்னை மனத்துயரத்தில் ஆழ்த்தி விடுகிறது. இதனால் நான் எப்பொழுதும் மன அமைதியின்மையினாலும் மற்றும் மன வருத்தத்திலும் தவிக்கிறேன். சம்பந்தப்பட்ட அந்த நபரும் என்னால் சந்தோஷத்தை இழந்து சோகமாக இருக்கிறார்கள்.

5. சரி, உங்கள் குடும்ப உறுப்பினர் சந்தோஷமாக இல்லை என்றால் நீங்களும் சந்தோஷமாக இல்லாமல் சோகமாகவும் மன அமைதியில்லாமலும் இருந்தால் அது எப்படி உங்களை பாதிக்கிறது?

இந்த சோகம் மற்றும் மன அமைதியின்மை எனக்குள் ஒரு வலியை ஏற்படுத்துகிறது, மன அமைதிக்கான ஒரு தேடுதல் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கிறது.

6. சரி, இந்த வலியினால் உங்களுக்கு ஏன் பிரச்சினை வருகிறது?

இயற்கையாகவே நான் வலியை ஏற்படுத்தும் சோகம், கவலை, பயம், கோபம், அமைதியின்மை போன்ற உணர்வுகளை வெறுக்கிறேன். சந்தோஷம் தரும் உணர்வுகளை மகிழ்ச்சி, அமைதி, நிம்மதி விரும்புகிறேன்.

**தீர்மானம் 1 –** இயற்கையாகவே நாம் அனைவரும் ஒரு சுகமான நல்ல அனுபவத்தைத்தான் விரும்புகிறோம் மற்றும் வலியான அனுபவங்களை வெறுக்கிறோம். நல்ல அனுபவங்கள் என்றால் அமைதி, நிம்மதி, சந்தோஷம் மற்றும் வலியான அனுபவங்கள் என்றால் சோகம் மன அமைதியின்மை, பயம் ஆகியவை ஆகும். இதுவே நமது மனப்பிரச்சினைக்கெல்லாம் ஆணி வேராக இருக்கிறது.

**உதாரணம் :** இப்பொழுது நீங்கள் ஒரு தொழில் செய்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் தொழிலில் லாபம் அடைய விரும்புவீர்களா அல்லது நஷ்டம் அடைய விரும்புவீர்களா. நிச்சயமாக லாபம் அடைய தான் விரும்புவீர்கள். ஏனென்றால் லாபம் அடைவது மகிழ்ச்சி உணர்வை தரும். நஷ்டம் அடைவது வருத்த உணர்வை தரும். இயற்கையாகவே நாம் எப்பொழுதும் மகிழ்ச்சியான மன நிலையையே விரும்புகிறோம் மற்றும் வருத்தமான மன நிலையை வெறுக்கிறோம்.

7. இப்பொழுது நாம் மனதை ஆராய்ச்சிக்கு எடுத்து கொள்வோம். மனம் என்றால் என்ன?

மனம் என்பது எண்ணங்களின் ஒரு தொகுப்பு.

8. மனம் என்பது எங்கே உள்ளது? அதை எப்படி உணர்கிறீர்கள்?

என்னுடைய மனதை ஒரு திட பொருளாக காண முடியவில்லை. எனக்கு வரும் எண்ணங்கள் மற்றும் உணர்வுகள் மூலமாகத்தான் நான் என்னுடைய மனதை உணர்கிறேன்.

9. உங்களுடைய மனதை எப்படி தெரிந்து கொள்கிறீர்கள்? உங்களுடைய மனதை மனதின் துணை இல்லாமல் புரிந்து கொள்ள முடியுமா?

இல்லை, எனது மனதை எண்ணங்கள் மற்றும் உணர்வுகள் மூலமாகத்தான் தெரிந்து கொள்கிறேன். மனதை வைத்துதான் மனதை அறிந்து கொள்கிறேன்.

10. எதையாவது அறிந்து கொள்ள மனதை தவிர உங்களிடம் வேறு ஏதாவது சாதனம் இருக்கிறதா?

இல்லை, என்னிடம் வேறு எந்த சாதனமும் இல்லை இந்த மனதை தவிர. மனதை வைத்துதான் எல்லாவற்றையும் அறிந்து கொள்கிறேன்.

**தீர்மானம் 2** – ஆக மனதை வைத்துதான் மனது மற்றும் மனதில் தோன்றும் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள முடியும். மனதையே ஓர் எண்ணம் மூலமாகத்தான் உணர முடியும்.

11. இப்பொழுது நீங்கள் ஒரு சினிமாவை முழு ஈடுபாட்டுடன் பார்த்து கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்து கொள்வோம். அந்த தருணத்தில் உங்கள் மனதை உங்களால் உணர முடியுமா?

இல்லை, முழு ஈடுபாட்டுடன் படம் பார்க்கும்பொழுது என்னையே மறந்து விடுவேன். மனம் இருப்பதே தெரியாது. சிறிது நேரத்திற்கு பின்னர் தான் நான் படம் பார்த்து கொண்டிருந்தேன் என்ற உணர்வு ஏற்படும்.

**தீர்மானம் 3** - முழு ஈடுபாட்டுடன் ஒரு விஷயத்தில் லயித்திருந்தால் மனம் இருப்பதே தெரியாது. சிறிது நேரத்திற்கு பின்னர்தான் மனதை நம்மால் உணரவே முடியும்.

12. இப்பொழுது உங்கள் மனதில் என்ன பிரச்சினை இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

என் மனம் எப்பொழுதும் கவலை பட்டு கொண்டு நிம்மதியில்லாமல் தவிக்கிறது.

13. உங்கள் மனதில் ஒரே நேரத்தில் இரண்டு எண்ணங்கள் வர வாய்ப்பு இருக்கிறதா?

இல்லை, ஒன்றன் பின் ஒன்றாக வருவது போல தான் தெரிகிறது.

14. அப்பொழுது இங்கே உங்களுக்குள் என்ன நடக்கிறது என்று கொஞ்சம் கவனித்து பாருங்கள். வருத்தம் வருகிற அந்த கணத்தில் வேறு ஏதாவது எண்ணம் வர முடியுமா?

இல்லை, அந்த கணத்தில் ஒரே ஓர் எண்ணம் தான் வர முடியும்.

15. அப்படியென்றால் நம்முடைய மனதில் ஒரு நேரத்தில் ஒரு சிந்தனைதான் வரும். இப்படித்தான் நமது மனதின் இயக்கம் அமைந்துள்ளதா?

ஆம் அப்படிதான் அமைந்துள்ளது.

16. மனதில் முதலில் வரும் வருத்தப்படுபவரும் அதனை தொடர்ந்து வருத்தத்தை எதிர்ப்பவரும் ஒரே பகுதி அல்லது ஒரே நபர் தான் என்று தெரிகிறதா?

ஆம், அப்படித்தான் இருக்கிறது.

17. சினிமாவில் லயித்து பார்த்துக் கொண்டிருந்த பொழுது உங்களையும் சினிமாவையும் பிரித்து உணர்ந்தீர்களா?

இல்லை, சினிமா பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது கதையில் ஒன்றி விட்டேன். மனமோ நான் என்கிற உணர்வோ வரவில்லை.

18. அப்படியென்றால் நீங்களாக ஏதாவது சிந்தனை செய்தால் தான் நான் என்னும் உணர்வு வருகிறதா?

ஆம், அப்படிதான் தெரிகிறது.

**விளக்கம் :** நாமாக ஏதாவது சிந்தனை செய்தால் தான் நான் என்னும் உணர்வும் வருகிறது. அப்படியென்றால் நான் என்பதும் சிந்தனையின் ஓர் அம்சமே. ஒரு புதிய சிந்தனை வந்துவிட்டது என்றாலே பழைய சிந்தனை ஏற்கனவே போய்விட்டது என்று அர்த்தம். இங்கே என்ன நடக்கிறது என்றால், **Mono Acting** போல் ஒரே மனமே ஒரு கணம் வருத்தமாக இருக்கிறது. மறுகணமே வருத்தத்தை மறுக்கும் சிந்தனையாகவும் இருக்கிறது. இந்த புதிய சிந்தனை வந்த அந்த கணமே வருத்தம் போய் விட்டது என்று தான் அர்த்தம். ஏனென்றால் இரண்டு சிந்தனைகள் ஒரு கணத்தில் இருக்க முடியாது. ஆக ஒரு செத்த பாம்பை தான் நாம் அடிக்க முயற்சித்து கொண்டு இருக்கிறோம். அதாவது ஏற்கனவே கடந்து போய் விட்ட ஒரு சிந்தனையை நினைத்து தான் இப்பொழுது மறுத்து கொண்டு இருக்கிறோம். சண்டை போட வந்த ஆள் போன பின்பு கத்தி வீசுவது போல.

19. உங்களுக்குள் இரண்டு தனித்தனி நபர்கள் இருக்கின்றார்களா? ஒரு நபர் நானாக இருந்து மற்றொரு நபராகிய ஒரு எண்ணைத்தை பார்க்கிறதா?

இரண்டு நபர்கள் இருப்பது சாத்தியம் என்ற நினைக்கிறீர்களா?

இல்லை. ஒரு நபர்தான் இருக்கிறார்.

இரண்டு இருக்க சாத்தியமில்லை.

ஆனால் ஏன் இப்படி இரண்டு நபர்கள் இருப்பது போல் தோன்றுகிறது.

**தீர்மானம் 4** - உங்கள் மனதானது இரண்டாக பிளவுபட்டு ஒரு பகுதி இன்னொரு பகுதியை பார்க்கிறது. ஒரு பகுதியில் நம் இயல்புக்கு ஏற்றார்போல் எண்ணங்கள் வருகிறது. இன்னொரு பகுதி அதை வரவேற்றுக் கொண்டோ அல்லது கண்டனம் செய்துகொண்டோ இருக்கிறது. இது நமது புத்தியை வைத்து நாம் "இது வேண்டும். இது வேண்டாம்" என்று தேர்வு செய்ய வைக்கிறது. மனத்தினுடைய இயற்கை அம்சமே இப்படித்தான் உள்ளது.

**உதாரணம் :** நீங்கள் ஒரு கண்ணாடி முன் நிற்கிறீர்கள் என்று வைத்து கொள்வோம். இப்பொழுது நமக்கு இரண்டு நபர்கள் இருப்பது போல் காட்சி அளிக்கும். ஒருவர் கண்ணாடிக்கு வெளியே, மற்றொருவர் கண்ணாடிக்கு பிம்பமாக காட்சி அளிக்கும். ஆனால் உண்மையில் இருப்பது என்ன? ஒரே நபர் தான். அதுபோல், ஒரே மனம் இரண்டு பகுதிகளாக பிரிந்து வருத்தப்படுபவன் போலவும், வருத்தத்தை நிராகரிப்பவன் போலவும் காணப்படுகிறது.

20. என்ன மாதிரியான எண்ணங்கள் மற்றும் உணர்வுகள் மனதிலிருந்து வருகிறது?

இரண்டு வகையான எண்ணங்களும் உணர்வுகளும் வருகிறது. நேர்மறை உணர்வுகள் (அமைதி, நிம்மதி, சந்தோஷம்) மற்றும் எதிர்மறை உணர்வுகள் (சோகம், பயம், குற்ற உணர்வு)

21. உங்களால் நீங்கள் விரும்பிய படி எண்ணங்களை வரவழைத்துக் கொள்ள முடியுமா?

இல்லை, என்னால் எண்ணங்களை விரும்பியபடி வரவழைத்துக் கொள்ள முடியவில்லை. அது தானாக நான் இருக்கும் சூழ்நிலைக்கேற்ப வருகிறது.

22. உங்களால் நீங்கள் விரும்பாத ஓர் எண்ணத்தை உங்கள் உள்ளிருந்து நீக்க முடியுமா?

இல்லை. அது முடியவில்லை. பலவந்தமாக முயற்சித்தாலும் அந்த எண்ணம் தானாக மீண்டும் மீண்டும் வருகிறது.

**தீர்மானம் 5** – ஆகவே நாம் எந்த ஒரு எண்ணத்தையும் வரவைக்கவோ அப்புறப்படுத்தவோ முடியாது. அது நேர்மறை எண்ணமாக இருந்தாலும் சரி எதிர்மறை எண்ணமாக இருந்தாலும் சரி,

23. உங்களால் ஓர் எண்ணத்தை ஐந்து அல்லது பத்து நிமிடங்கள் வரை தக்க வைத்துக் கொள்ள முடிகிறதா?

இல்லை. எண்ணங்களை பிடித்து வைக்க முடியவில்லை. பலவந்தமாக பிடிக்க முயற்சி செய்தாலும் கூட என் மனம் தானாகவே வேறு ஒரு எண்ணத்திற்கு சென்று விடுகிறது.

24. உங்களால் ஓர் எண்ணத்தை உங்கள் விருப்பம் போல் தாமதப் படுத்தி வெளிவர செய்ய முடிகிறதா?

இல்லை. அந்த எண்ணம் வந்த பிறகுதான் அதை தெரிந்து கொள்ளவே முடிகிறது.

**தீர்மானம் 6** – நம்மால் ஒரு எண்ணத்தை நமது விருப்பம் போல் பிடித்து வைக்கவோ அல்லது தாமத படுத்தவோ முடியாது.

**உதாரணம் :** வேகமாக ஓடிக்கொண்டிருக்கிற ஒரு ஆற்றை எப்படி நாம் கை வைத்து அதன் வேகத்தை கூட்டவோ குறைக்கவோ முடியாதோ, அதே போல் ஒரு எண்ணத்தை நமது விருப்பம் போல் பிடித்து வைக்கவோ அல்லது அப்புற படுத்தவோ முடியாது என்பதை ஆராய்ச்சி செய்து புரிந்து கொள்ளவேண்டும்.

25. உங்களால் ஒரு மெல்லிய உணர்வும் சிந்தனையும் அல்லது ஒரு தீவிர உணர்வும் சிந்தனையும் உருவாக்க முடியுமா?

இல்லை. அது முடியாது. அது சூழ்நிலைக்கு ஏற்றாற்போல் அதன் தீவிரம் மாறுபடுகிறது.

26. ஒரு நிகழ்வு உங்களுடைய எந்த கட்டளையையும் விருப்பத்தையும் ஏற்றுக் கொள்ளாவிட்டால் அது உங்கள் விருப்பப்படி நடக்கிறது என்று சொல்ல முடியுமா?

இல்லை. அது என் விருப்பப்படி நடப்பது இல்லை.

27. இந்த மனது உங்களுடைய விருப்பப்படி நடக்கவில்லை என்றால் உங்களால் உங்கள் எண்ணங்களை சீர் செய்யவோ அல்லது தூய்மை படுத்தவோ முடியுமா?

இல்லை. எனக்கு புரிகிறது. என்னுடைய எந்த கட்டளையையும் என் மனம் கேட்டு கொள்வதில்லை.

28. ஒரு நிகழ்வு உங்களுடைய எந்த கட்டளையையும் விருப்பத்தையும் ஏற்றுக் கொள்ளாவிட்டால் அதை சரி செய்யும் பொறுப்பை நீங்கள் ஏற்க முடியுமா?

அதை சரி செய்யும் பொறுப்பை கையில் எடுத்து சரி செய்ய நினைத்தாலும் கூட அந்த முயற்சியில் தோல்வியே அடைகிறேன். என் மனம் என்னுடைய எந்த கட்டளையையும் கேட்டுக்கொள்ளவில்லை.

## தீர்மானங்கள்

- மனம் என்பது எண்ணங்களின் தொகுப்பு.
- மனம் ஒரு ஸ்தூல வஸ்து கிடையாது. அது ஒரு தொடர்ச்சியான எண்ண ஓட்டம்.
- இரண்டு சிந்தனைகள் ஒரு கணத்தில் இருக்க முடியாது.
- ஒரு புதிய சிந்தனை வந்து விட்டது என்றாலே பழைய சிந்தனை ஏற்கனவே போய்விட்டது என்று அர்த்தம்.
- நமக்குள் இரண்டு பாகங்கள் இல்லை. நமது மனம்தான் இரண்டாக பிளவுபட்டு ஒரு பகுதி எண்ணமாகவும் மற்றொரு பகுதி அதை விமர்சிப்பவனாகவும் இருக்கிறது.
- நான் என்னும் உணர்வும் சிந்தனையின் அம்சமாகவே இருக்கிறது.
- நம்மால் ஓர் எண்ணத்தை ஏற்படுத்தவோ அல்லது அப்புறப்படுத்தவோ முடியாது.
- நம்மால் ஓர் எண்ணத்தை நீடிக்கவோ தாமதப்படுத்தவோ முடியாது.
- நம்மால் ஓர் எண்ணத்தின் தீவிரத்தை குறைக்கவோ கூட்டவோ முடியாது.
- நமது மனதை கட்டுப்படுத்த நினைத்து என்ன வேலைகள் செய்தாலும் அது தோல்வியில் தான் முடியும்.

**இறுதியான முடிவு**

நமது மனதை கட்டுப்படுத்த நினைக்கும் எந்த முயற்சியும் தோல்வியில் தான் முடியும்.

உங்களுக்கு இந்த முடிவில் முழு திருப்தி இல்லாவிட்டால் இந்த சோதனையை நீங்கள் எவ்வளவு முறை வேண்டுமானாலும் செய்து பார்க்கலாம். உங்களது வசதிகேற்ப எந்த நேரத்திலும் எந்த எண்ணத்தை வேண்டுமானாலும் எடுத்து கொண்டு நீங்கள் முழு திருப்தி அடையும் வரை இந்த சோதனையை செய்து பார்க்கலாம்.

**இப்பொழுது புற நிகழ்வுகளை பற்றி சிறிது பார்ப்போம்.**

29. உங்கள் எண்ணங்கள் மற்றவர்களுக்கு தெரியுமா? நீங்கள் சொல்லாமல் உங்கள் எண்ணங்களை மற்றவர்கள் புரிந்து கொள்ள முடியுமா?

இல்லை. மற்றவர்கள் என் எண்ணங்களை பார்க்கவோ புரிந்து கொள்ளவோ முடியாது. நான்தான் என் எண்ணங்களை வெளிப்படுத்த வேண்டும்.

30. வெளி உலகத்தினர் உங்கள் எண்ணங்களை பார்க்காமல் உங்களை எப்படி புரிந்து கொள்கிறார்கள்?

அவர்களுக்கு என்னுடைய பேச்சு மற்றும் செயல் மட்டுமே தெரிய வாய்ப்பு இருக்கிறது. அதன் மூலமே அவர்கள் என்னை பற்றி தெரிந்து கொள்கிறார்கள்.

31. இப்பொழுது உங்களுக்கு ஒரு கேள்வி தோன்றலாம். மனதை முழுமையாக புறக்கணித்துவிட்டால் வெளிப்புற செயல்களை எப்படி செய்வது என்று. உணர்வுகள் அகம் சார்ந்ததாகவும் புறம் சார்ந்ததாகவும் வரலாம். கவலை அகத்தை பற்றியோ அல்லது ஒரு புற நிகழ்வை பற்றியோ வரலாம். அந்த கவலையில் ஏதாவது வித்தியாசம் தெரிகிறதா?

இல்லை. உணர்வு தளத்தில் ஏற்படும் இரண்டு கவலையும் ஒரே மாதிரி தான் இருக்கிறது.

32. உங்களை செயல் செய்ய எது தூண்டுகிறது?

என்னுடைய எண்ணம் அல்லது உணர்வுதான் என்னை செயல் செய்ய தூண்டுகிறது.

33. சற்று யோசித்து பாருங்கள். இப்பொழுது எந்த எண்ணமும் உணர்வும் வரவில்லையென்றால் ஒரு செயலை செய்ய முடியுமா?

இல்லை. செய்ய முடியாது.

**விளக்கம் :** ஓர் உணர்வு உங்களுடைய புற தேவைக்கு தூண்டுதலாக இருந்தால் அந்த தூண்டுதலை உபயோகபடுத்தி செயல்களை செய்யலாம். எந்த செயலையும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்றால். அந்த தூண்டுதலையும், உணர்வையும், எண்ணத்தையும் எடுத்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. எதுவுமே செய்யாமல் இருந்தால் அது தானாகவே மறைந்து விடும்.

**தீர்மானம் 7** – மற்றவர்கள் உங்கள் எண்ணங்களை அறிவது இல்லை. உங்கள் செயல் மட்டுமே மற்றவர்களுக்கு தெரியும். உலகத்திற்கு செயல் மட்டுமே தெரியும் உங்கள் எண்ணங்கள் தெரியாது.

**உதாரணம்** : நாம் ஒரு ஆபத்தான சூழ்நிலையை சந்திக்கின்றோம். நமக்கு பயம் ஏற்படுகிறது. நமக்கு ஏற்படும் பயத்தை தூண்டுகோலாக பயன்படுத்திக்கொண்டு அச்சூழ்நிலையில் இருந்து தப்பித்துக்கொள்ளலாம்.

நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும் அகம் சார்ந்தவை. அவைகளை நிர்வாகம் செய்யத்தேவையில்லை புறச்செயலுக்கு தூண்டுகோலாக பயன்படுத்திக்கொள்ளலாம்.

**முடிவாக்கம்**

நம்முடைய செயல்கள் இந்த உலகத்தில் ஏதாவது ஒரு விதத்தில் மாற்றத்தை ஏற்படுத்தும். ஏனென்றால் இந்த சமுதாய கட்டமைப்பு நமக்கு நாமே உருவாக்கிய செயற்கையான ஒன்றுதான். ஆகையால் நாம் செய்யும் செயல்கள் அனைத்தும் சமுதாயத்தின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு எவரையும் காயபடுத்தாமல் இருக்க வேண்டும்.

மனதை சரி செய்யும் முயற்சியை முழுமையாக புறக்கணித்து விடலாம். அதை பற்றி சிந்திக்க கூட தேவை இல்லை. ஏனென்றால் அது எப்படியும் நம்முடைய கட்டளைக்குட்பட்டதல்ல. நீங்கள் மனதிடம் உங்கள் தோல்வியை ஒப்புக்கொள்ளலாம் அல்லது உங்களுக்கு முழு திருப்தி அளிக்கும் வரை ஓய்ந்து சாயும் வரை மனதுடன் சண்டை போட்டு பிறகு ஒரு முடிவுக்கு வரலாம்.

நம் மனம் நமது கட்டுப்பாட்டில் இல்லை என்பதை நாம் கண்டுபிடிக்கிறோம். நமக்கு இருக்கிறது ஒன்றே ஒன்று. அது புற உலகம் தான்.

ஆதலால் உங்கள் முழு கவனத்தையும் புற உலகத்தில் செலுத்தி அந்தந்த சூழ்நிலைக்கேற்ப செயல்கள் செய்வது ஒன்றுதான் நமது நோக்கம்.

ஞானத்தின் ஆராய்ச்சி என்ற இக்கட்டுரையை எழுதி வடிவமைத்தவர்
திரு. **ஆனந்த்**, சென்னை அவர்கள். இது சம்பந்தமான சந்தேகங்களை அவருடன் தொடர்பு
கொண்டு தெளிவு பெறலாம். செல். 98843 48800

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555